

ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும்

# குறள் முழக்கம்




திருவள்ளுவர் ஆண்டு-2056 ஆனி-23 பொ.ஆ.2025- சூலை-7

உலகத் திருக்குறள் இணையக் கல்விக்கழகம் வெளியிடும் இலவச இணையத் திங்களிதழ்

## பெருங்கவிக்கோ வா.மு.சே புகழ்மலர்

தினகரன் தமிழகம்

### பெருங்கவிக்கோ வா.மு.சேதுராமனுக்கு காவல்துறை மரியாதையுடன் இறுதி அஞ்சலி



சென்னையில் உடல்நலக்குறைவால் காலமான வா.மு.சேதுராமனின் இல்லத்திற்கு முதல்வர் மு.க.ஸ்டாலின் நேற்று நேரில் சென்று, அவரது உடலுக்கு மலர்மாலை வைத்து அஞ்சலி செலுத்தினார். அருகில், அமைச்சர் மா.சுப்பிரமணியன்.

### முதல்வர் மு.க.ஸ்டாலின் உத்தரவு

சென்னை, ஜூலை 6: தமிழக அரசு நேற்று வெளியிட்டுள்ள அறிவிப்பு:மறைந்த தமிழறிஞரும் கவிஞருமான கலைமாமணி கவிக்கோ வா.மு.சேதுராமன் நேற்று முன்தினம் (4ம் தேதி) அகவை மூப்பின் காரணமாக இயற்கை எய்தினார்.

இதையடுத்து, அன்னாரின் உடலுக்கு முதல்வர் மு.க.ஸ்டாலின் நேற்று நேரில் சென்று அஞ்சலி செலுத்தினார். திமுக வர்த்தக அணி செயலாளர் காசிமுத்து மணிக்கம் உள்ளிட்ட ஏராளமான நிர்வாகிகள் அஞ்சலி செலுத்தினர்.

ஒரு லட்சத்திற்கும் மேற்பட்ட கவிதைகள், நூறுக்கும் மேற்பட்ட கவிதை நூல்கள் உள்ளிட்ட படைப்புகளை தமிழுலகிற்கு அளித்துள்ளவர் வா.மு.சேதுராமன்.

மேலும், அவர் தமிழ்நாடு அரசின் கலைமாமணி, திருவள்ளுவர் விருது உள்ளிட்ட பல விருதுகளை பெற்றுள்ளார்.

பெருங்கவிக்கோ என்று அனைவராலும் அறியப்பட்ட மூத்த தமிழறிஞர் கலைமாமணி வா.மு.சேதுராமனை கவுரவிக்கும் விதமாக தமிழ்நாடு அரசு காவல் துறை மரியாதையுடன் இறுதி அஞ்சலி செலுத்தி நல்லடக்கம் செய்ய முதல்வர் மு.க.ஸ்டாலின் உத்தரவிட்டுள்ளார்.

அதன்படி, காவல்துறை மரியாதையுடன் இறுதி அஞ்சலி செலுத்தப்பட்டது.

## மாண்புமிகு முதல்வர் அவர்களின் புகழ்வணக்கம்.

பன்னாட்டுத் தமிழுறவு மன்ற நிறுவனர் பெருங்கவிக்கோ வா.மு.சேதுராமன் அவர்கள் மறைந்த செய்தியறிந்து சொல்லொணாப் பெருந்துயர் என்னை ஆட்கொண்டது! இன்றுகூட முரசொலியில், "ஓரணியில் தமிழ்நாட்டின் உரிமை நாட்டுவோம். தமிழர் ஒற்றுமையாய்த் திரண்டெழுந்தே வலிமை காட்டுவோம்!" எனக் கவிதை தீட்டியிருந்த அவர் இப்போது நம்மிடையே இல்லை என்பதைச் சிந்தை ஏற்க மறுக்கிறது.

[தொடர்ச்சி உள்ளே.....

“தமிழ் தமிழ் தமிழ் என்று தன்னுடைய வாழ்நாள் முழுவதும் தமிழுக்காகவே தன்னை ஒப்படைத்திருக்கின்ற ஒரு பெருமகனைக் காண வேண்டுமென்றால், அது பெருங்கவிக்கோ சேதுராமனைத் தவிர வேறு யாரும் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை.” என்று முத்தமிழறிஞர் கலைஞர் அவர்களால் பாராட்டப்பட்ட பெருந்தகை அவர்!




தமிழ்நாடு அரசின் கலைமாமணி, திருவள்ளுவர் விருது உள்ளிட்ட பல விருதுகளுக்குச் சிறப்பு சேர்த்த செந்தமிழ்ச் செம்மல்.
தமிழ்ப்பணிக்கெனத் தன்னை ஒப்படைத்துக்கொண்ட அந்தத் தியாகச் சுடர் தனது ஒளியை நிறுத்திக் கொண்டு, வேதனை எனும் இருளில் நம் மனதைத் தவிக்கவிட்டிருக்கிறார்!
ஒரு இலட்சத்திற்கும் மேற்பட்ட கவிதைகள், நூறுக்கும் மேற்பட்ட கவிதை நூல்கள் உள்ளிட்ட படைப்புகளைத் தமிழுலகிற்கு அளித்த பெருங்கவிக்கோ வா.மு.சேதுராமன் அவர்களது புகழ் தமிழுள்ள வரை போற்றப்படும்!

அன்னாரது பிரிவால் வாடும் அவரது குடும்பத்தினர் - உறவினர்கள் - தமிழ்கூறு நல்லுலகின் சான்றோர்கள் - தமிழ்த் தொண்டர்கள் என அனைவருக்கும் எனது ஆழ்ந்த இரங்கலையும் ஆறுதலையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

***----மு.க.ஸ்டாலின்***



# தமிழர் தலைவர் கி.வீரமணி அவர்களின் புகழ்வணக்கம்

‘’பெருங்கவிக்கோ’’ என்ற உலகறிந்த புலவர் பெருமகன் மானமிகு வா.மு. சேதுராமன் (வயது 91) நேற்றிரவு (4.7.2025) மறைவுற்றார் (1935–2025) என்ற தகவல் அறிந்து பெரிதும் வருந்துகிறோம்.

எளிய குடும்பத்தில் பிறந்து, தன்னிகரற்ற தனி முயற்சியால் தமிழ் வித்துவான், முதுகலை, சென்னைப் பல்கலைக் கழகத்தில் முனைவர் பட்டம் பெற்றவர்.தமிழாசிரியராகப் பணியாற்றி ஓய்வு பெற்றவர். பணியில் ஓய்வு பெற்றாலும் தமிழ்ப் பணியில் ஓய்வு பெற்றாரில்லை.

‘தமிழ்ப் பணி’ என்னும் மாத இதழையும் நடத்தி வந்தவர். அவரது அரும் பணிக்காக தமிழ்நாடு அரசால் ‘கலைமாமணி’, ‘திருவள்ளுவர் விருது’களைப் பெற்றவர். பன்னாட்டுத் தமிழுறவு மன்றத்தின் நிறுவனருமாவார்.கவிதை, காவியம், நாடகங்கள் என்று எண்ணற்ற நூல்களை எழுதி உள்ளார்.

தள்ளாத வயதிலும் மொழி உணர்வையும், இனவுணர்வையும் பரப்பும் வகையில் ஓயாது நடைப் பயணம் மேற்கொண்டவர்.தமிழ்நாட்டில் மட்டுமல்ல; உலகின் பல நாடுகளையும் சுற்றி தமிழ்த் தொண்டாற்றியவர். அவர்தம் இழப்பு என்பது அவரின் குடும்பத்தைப் பொறுத்தது மட்டுமல்ல; தமிழ் மக்களுக்கே ஏற்பட்ட இழப்பு! சில மாதங்களுக்கு முன்புதான் அவரின் 90ஆம் ஆண்டு பிறந்த நாள் விழா பெரியார் திடலில் சிறப்புடன் நடத்தப் பெற்று, நாமெல்லாம் கலந்து கொண்டு, வாழ்த்தி மகிழ்ச்சியுற்றோம். சென்னை பெரியார் திடலில் நடக்கும் நமது எல்லா நிகழ்ச்சிகளிலும் முதல் வரிசையில் அமர்ந்து அக மகிழ்ந்தவர்.மூன்று நாள்முன்புகூட என்னை பெரியார் திடலில் வந்து சந்தித்தார்.அவருக்கு நான்கு மகன்கள், ஒரு மகள் உண்டு. அனைவரும் உயர் தனிக் கல்வி பெற்று உள்நாட்டிலும், வெளிநாட்டிலும் பெரும் பணிகளில் சிறப்பாக வாழ்கின்றனர். அவர் மறைவால் பெருந் துயரத்திற்கு ஆளாகியிருக்கும் அவர்களின் அருமைக் குடும்பத்தினருக்கும், உற்றார் உறவினர்களுக்கும், உலகம் தழுவிய நண்பர்களுக்கும், தமிழ் அன்பர்களுக்கும் திராவிடர் கழகத்தின் சார்பில் ஆழ்ந்த இரங்கலையும், ஆறுதலையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

-- கி.வீரமணி, தலைவர்,திராவிடர் கழகம்



மீசைத் தமிழர் என்று ஆசைத் தமிழர்களால் அழைக்கப்பட்ட பெருங்கவிக்கோ வா.மு.சேதுராமன் மறைந்துவிட்டார் என்ற செய்தியால் நெஞ்சம் ஒருகணம் நின்று துடித்தது.

தன் மொத்த வாழ்க்கையை முத்தமிழுக்கே காணிக்கையாக்கிய மாணிக்கத் தமிழர் வா.மு.சேதுராமன் எண்ணம் சொல் செயல் யாவிலும் தனித்தமிழையே தாங்கிப்பிடித்தவர்.

தமிழுக்காக நடைப்பயணம் சென்று சென்று கால்கள் தேய்ந்தாலும் கொள்கை தேயாத கோமான்.

அவரது தமிழ்ப்பணி இதழ் என் தொடக்ககாலக் கவிதைகளை வெளியிட்டு வெளிச்சம் தந்தது என்பதை நான் நன்றியோடு நினைத்துப் பார்க்கிறேன் .

வளையாத முதுகெலும்பும் நிலையான கொள்கையும் சலியாத உழைப்பும் சரியாத தமிழ்ப் பற்றும்கொண்ட பாவேந்தர் மரபின் நல்லதொரு பெருங்கவிஞன் நம்மைவிட்டு நீங்கிவிட்டார் என்று பாரதிதாசன் கவிதா மண்டலமே கண்ணீர் வடிக்கும். தமிழூட்டி வளர்த்த அவர் பிள்ளைகளுக்கு என் ஆழ்ந்த இரங்கல். ஒரு வெற்றிடம் உண்டாகிவிட்டது. வா.மு.சேதுராமனின் தோற்றத்திற்கும் ஏற்றத்திற்கும் ஈடு கொடுக்கும் இன்னொரு கவிஞன் இங்கு இல்லை போய்வாரும் கவிஞரே!

எங்களோடு உங்கள் தமிழ் இருக்கும்; --- **வைரமுத்து**



## பெருங்கவிக்கோ அவர்களுக்கு வீரவணக்கம்!

பெருங்கவிக்கோ வா. மு. சேதுராமன் (91) அவர்களின் மறைவு பெரும்அதிர்ச்சியளிக்கிறது. புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் அவர்களின் கவிப்பட்டாளத்தின் தளபதிகளுள் ஒருவர். நின்ற இடத்தில் நினைத்த நொடியில் மரபு கவிதை படைப்பதில் பேராற்றல் மிக்கவர். ' பன்னாட்டுத் தமிழுறவு மன்றத்தை' நிறுவி அதன்மூலம் உலகத்தமிழர்களை ஒருங்கிணைக்கும் அளப்பரிய பணிகளை அரை நூற்றாண்டுக்கும்மேலாக மேற்கொண்டவர். 'தமிழ்ப்பணி' என்னும்இதழின் வழி அவர் ஆற்றிய அருந்தமிழ்ப் பணிகள் போற்றுதலுக்குரியவை.சட்டக்கல்லூரியில் நான் பயின்ற காலத்திலிருந்து (1985-88) அவரை அறிவேன். அவருடன் தமிழ்நாட்டிலும் அயல்நாடுகளிலும் திருக்குறள்மாநாடு உள்ளிட்ட பல்வேறு நிகழ்வுகளில் பங்கேற்றுள்ளேன். காணும்போதெல்லாம் என்னைக் கட்டித்தழுவி களிப்புற வாழ்த்தியவர். "தமிழுக்கும் தமிழ்நாட்டுக்கும் உமது பணிகள் தொடரட்டும்" என்று அவ்வப்போது என்னை வாஞ்சையுடன் தட்டிக்கொடுத்து ஊக்கப்படுத்தியவர்.
எளியோரையும் இளையோரையும் மதிப்புடன் வணங்கிப் பேரன்பு செலுத்தும் பெருந்தன்மை கொண்டவர். ஈழத் தமிழர்களின் விடுதலைக்காகப் பாடியவர். அதற்கென எண்ணற்றப் போராட்டங்களில் நம்மோடு சேர்ந்து களமாடியவர். தமிழ் செம்மொழியாகவேண்டுமென தலைநகர் தில்லியில் தமிழ் உணர்வாளர்களுடன் உண்ணாநிலை அறப்போரில் ஈடுபட்டவர்.
அவருக்கு எமது செம்மாந்த வீரவணக்கத்தைச் செலுத்துகிறோம்.
அவரது மறைவு தமிழுக்கும் தமிழர்களுக்கும் நேர்ந்த பேரிழப்பாகும். அவரை இழந்துவாடும் குடும்பத்தாருக்கும் தமிழ்த் தேசியப் பற்றாளர்களுக்கும் எமது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்கிறோம். – தொல்.திருமாவளவன்,விடுதலைச் சிறுத்தைகள் கட்சி





# தமிழியக்கம்

34, தென்னைமரத் தெரு, வேலூர்-632001.
☎ 0416-2211402 ✆ 9443375121
✉ thamiziyakkam@gmail.com



05.07.2025
வட கரோலினா, ஐக்கிய அமெரிக்கா

## சொல்லொணாப் பெருந்துயர்

பன்னாட்டுத் தமிழுறவு மன்ற நிறுவுநர் **பெருங்கவிக்கோ வா.மு.சேதுராமன்** மறைந்தார்

**பெருங்கவிக்கோ வா.மு.சேதுராமன்** ஒப்பற்ற வரலாற்றுச் சாதனையாளர்.

தமிழ்நலன் காக்கவும் தமிழுணர்வைப் பரப்பவும் உலகைப் பலமுறை வலம் வந்த பெருந்தகை.

தமிழ்வளர்ச்சிக்காக நாளும் உழைத்த உயர்பெரும்புலவர். தமிழ் உரிமை காப்பதற்குப் போராட்டங்கள் நடத்திப் பலமுறை சிறை சென்ற செம்மல்.

சுருங்கச் சொன்னால் " கெடல் எங்கே தமிழின் நலம், அங்கெல்லாம் தலையிட்டுக் கிளர்ச்சி செய்க" எனும் பாவேந்தரின் பாடல் இவர்தம் வாழ்வுநெறியாக அமைந்தது.

தமிழ்ப்போராளி; உலகத் தமிழ்த்தூதர்; என்னும் இரு சிறப்பியல்புகளும் இவரது வாழ்க்கையை விளக்கப் போதுமானவை.

**பெருங்கவிக்கோவின்** பாவன்மை மட்டுமன்றி இலக்கியப்புலமைநலனும் அவர்தம் படைப்புகளை கற்போர் அனைவரையும் கவர்ந்திழுக்கும் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

முன்னோர் மொழிபொருளேயன்றி அவர் மொழியையும் பொன்னேபோல் போற்றும் தமிழ்ப்புலவர்தம் பாடல்நெறியைப் பெருங்கவிக்கோ அவர்களின் படைப்புகளில் காண இயலும். அவற்றைத் தொகுத்து நோக்கினால் சங்க இலக்கியம் முதல் பாரதிதாசன் வரை அனைத்து இலக்கியங்களிலும் ஆழங்காற்பட்டவர் **பெருங்கவிக்கோ** என்பதைத் தெளியலாம்.

தமிழ்க்காப்பியங்களுள் தனித்தன்மை பெற்று இம் மண்ணின் விளைச்சலாக, தமிழ்ச்சமூக வரலாற்றின் ஆவணப்பதிவாக விளங்கும் தனித்தன்மை **பெருங்கவிக்கோவின்** சேதுகாப்பியத்திற்கே உரிய தனிச்சிறப்பாகும்.

அய்யா அவர்களின் இழப்பால் வாடும் அவரது குடும்பத்தினர் - உறவினர்கள் - தமிழ்கூறு நல்லுலகின் சான்றோர்கள் - தமிழ்த் தொண்டர்கள் என அனைவருக்கும் தமிழியக்கத்தின் சார்பில் ஆழ்ந்த இரங்கல்...

கோவிசுவநாதன்

**கோ. விசுவநாதன்**
நிறுவுநர்-வேந்தர், விஐடி பல்கலைக்கழகம்
நிறுவுநர்-தலைவர், தமிழியக்கம்




## பெருங்கவிக்கோ வா. மு. சேதுராமன் மறைவுக்குப் புதுவைத் தமிழ்ச்சங்கத்தில் இரங்கல் கூட்டம்

பெருங்கவிக்கோ வா. மு. சேதுராமன் அவர்கள் 04. 07. 2025 இரவு சென்னையில் இயற்கை எய்தினார். அவரின் மறைவுக்குப் புதுவைத் தமிழ்ச்சங்கத்தில் இரங்கல் கூட்டம் இன்று 05.07.2025 மாலை 7 மணியளவில் புதுவைத் தமிழ்ச்சங்கத்தின் சார்பில் நடைபெற்றது. புதுவைத் தமிழ்ச்சங்கத் தலைவர் முனைவர் வி. முத்து அவர்களின் தலைமையில் இந்த நிகழ்வு நடைபெற்றது. புதுவைத் தமிழ்ச்சங்கத்தைச் சேர்ந்தவர்கள் பலரும் இந்த நிகழ்வில் கலந்துகொண்டு, வா. மு.சேதுராமன் அவர்களின் படத்துக்கு மலர்தூவி, இரங்கல் உரையாற்றினார்.

தமிழ்ச்சங்கத்தின் செயலர் பாவலர் சீனு. மோகன்தாசு வரவேற்புரையாற்றி, பெருங்கவிக்கோ அவர்களுடன் அமைந்த தொடர்பைப் பகிர்ந்துகொண்டார். புதுவைத் தமிழ்ச்சங்கத் தலைவர் முனைவர் வி. முத்து அவர்கள் பெருங்கவிக்கோவின் பன்முகப் பணிகளை நினைவுகூர்ந்தார். தமிழ்ச்சங்கத்தின் பொருளாளர் அருள்செல்வம், சீனு. வேணுகோபால், மு. இளங்கோவன், கவிஞர் சச்சிதானந்தம், தேவி. திருவளவன், சங்கர், மகளிர் ஓசை ஆசிரியர், என். ஆர் இலக்கியப் பேரவையைச் சேர்ந்த தனசேகர் உள்ளிட்டோர் தங்களுக்குப் பெருங்கவிக்கோ அவர்களுடன் அமைந்த தொடர்பினை நினைவுகூர்ந்து இரங்கல் உரையாற்றினர்.நிகழ்ச்சியின் நிறைவில் மறைந்த பெருங்கவிக்கோ அவர்களுக்கு இரண்டு நிமையம் அமைதி வணக்கம் நடைபெற்றது.






வள்ளுவர் குரல் சி.இராசேந்திரன்

பெருங் கவிக்கோ வா. மு. சேதுராமன் (1935-2025) தமிழே மூச்சாக வாழ்ந்தவர்.அவருக்கு கோவில்பட்டி திருவள்ளுவர் கழகம் விருது வழங்கிய போது என்னைத் தலைமை விருந்தினராக அழைத்திருந்தார்கள்..அன்னாரது குடும்பத்தினருக்கு , வள்ளுவர் குரல் குடும்பம் தனது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்கின்றது

அரிஅரவேலன் யரலவழள—

மறைந்தார் வா.மு.சே

இராமநாதபுரம் முதுகுளத்தூர் வட்டம் ஆண்டநாயகபுரம் என்னும் சிற்றூரில் உழவருக்கு மகனாகப் பிறந்து கற்ற தமிழால் உலகம் முழுவதும் சுற்றிவந்த பெரும்புலவர் வா.மு.சேதுராமன். பெருங்கவிக்கோ என்றும் இருபதாம் நூற்றாண்டின் மீனாட்சிசுந்தரனார் என்றும் போற்றப்பட்டவர். தமிழ்ப்படைப்பு நோபல் பரிசைப் பெறவேண்டும் என்று விழைந்தவர். தமிழுணர்வைப் பரப்பும் நோக்கோடு 30 ஆண்டுகளுக்கும் மேலாக ஆண்டுதோறும் குமரியில் தொடங்கி சென்னை வரை பயணம் மேற்கொண்டவர். இவரது தமிழ்ப்பணியில், நான் பள்ளி மாணவனாக இருந்தபொழுது எழுதிய கட்டுரைகளையும் கவிதைகளையும் வெளியிட்டு ஊக்குவித்தவர். நேரில் கண்டபொழுதெல்லாம் அன்போடு உரையாடியவர். நேற்று காலமாகியிருக்கிறார். சேதுகாப்பியத்தின் இறுதிக்காண்டம் நிறைவெய்திவிட்டது.

## அமெரிக்கத் தமிழர் திலகம்

## மருத்துவமாமணி

## சோம.இளங்கோவன்

## இரங்கலுரை

### உம் வழியில் உழைத்திடுவோம்.

பரம்பரையின் பெருமை உண்டு
பண்பாட்டின் சிறப்பு உண்டு
பழகுவதோ எளிமை என்றும் !
பள்ளி ஆசிரியர் பணி தொடங்கி
பாரெல்லாம் தமிழ் பரப்பி
கவியரங்கம் செல்லா நாடில்லை !
உலகத்தமிழர் நன்கறிந்த நாயகனே
வா.மு.சே பேர் சொன்னால்
வாழ்த்திடுவோர் பலருண்டு !
தமிழே வாழ்வென்றாய்
தளராது உழைத்திட்டாய்
தரணிவாழ் தமிழரெல்லாம்
தலைவணங்கிப் போற்றுகின்றோம்
புகழ்வணக்கம் செலுத்துகிறோம்
தமிழ்ப் பணியில் தடம் பதித்த
உம் வழியில் உழைத்திடுவோம்.

- சோம .இளங்கோவன் .







,

சனிக்கிழமை, 5 ஜூலை 2025

# பெருங்கவிக்கோ வா.மு.சேதுராமன் காலமானார்



**சென்னை, ஜூலை 4:** மூத்த தமிழறிஞர் பெருங்கவிக்கோ வா.மு.சேதுராமன் (90) உடல்நலக்குறைவு காரணமாக சென்னையில் வெள்ளிக்கிழமை (ஜூலை 4) காலமானார்.

ராமநாதபுரம் மாவட்டம் முதுகுளத்தூர் அருகே ஆண்டநாயகபுரத்தில் 1935-ஆம் ஆண்டு பிறந்த வா.மு. சேதுராமன், சென்னை பல்கலைக் கழகத்தில் முனைவர் பட்டம் பெற்றார். நெஞ்சத்தோட்டம், ஐயப்பன் பாமாலை, தமிழ் முழக்கம், தாய் மண், சேது காப்பியம் உள்பட ஏராளமான நூல்களை எழுதியுள்ளார். ஒரு லட்சத்துக்கும் மேற்பட்ட கவிதைகளைப் படைத்தவர். பன்னாட்டுத் தமிழுறவு மன்றத்தின் நிறுவனராக இருந்தவர்.

இவருக்கு பெருங்கவிக்கோ, செந்தமிழ்க் கவிமணி போன்ற பட்டங்கள் வழங்கப்பட்டுள்ளன. திருவள்ளுவர் விருது, கலைமாமணி விருது, சி.பா.ஆதித்தனார் மூத்த தமிழறிஞர் விருது உள்ளிட்ட பல்வேறு விருதுகளைப் பெற்றுள்ளார்.

அவர் விருகம்பாக்கம் சின்மயா நகரில் குடும்பத்துடன் வசித்து வந்தார். அவருக்கு மகன்கள் வா.மு.சே. திருவள்ளுவர், வா.மு.சே. கவியரசன், வா.மு.சே. ஆண்டவர், வா.மு. சே.தமிழ் மணிகண்டன், மகள் வா.மு.சே. பூங்கொடி ஆகியோர் உள்ளனர்.

மறைந்த வா.மு.சேதுராமன் இறுதிச் சடங்கு சென்னை விருகம்பாக்கத்தில் நடைபெறவுள்ளது.

**முதல்வர் இரங்கல்:** பெருங்கவிக்கோ வா.மு.சேதுராமன் மறைவுக்கு முதல்வர் மு.க.ஸ்டாலின் இரங்கல் தெரிவித்துள்ளார்.

இது குறித்து அவர் தனது எக்ஸ் பக்கத்தில் வெள்ளிக்கிழமை வெளியிட்டுள்ள இரங்கல் செய்தி: பன்னாட்டுத் தமிழுறவு மன்ற நிறுவனர் பெருங்கவிக்கோ வா.மு.சேதுராமன் மறைந்த செய்தியறிந்து சொல்லொணாப் பெருந்துயர் என்னை ஆட்கொண்டது. இன்றுகூட (வெள்ளிக்கிழமை) முரசொலியில், ஓரணியில் தமிழ்நாட்டின் உரிமை நாட்டுவோம். தமிழர் ஒற்றுமையாய்த் திரண்டெழுந்தே வலிமை காட்டுவோம்! எனக் கவிதை தீட்டியிருந்த அவர், இப்போது நம்மிடையே இல்லை என்பதைச் சிந்தை ஏற்க மறுக்கிறது.

வாழ்நாள் முழுவதும் தமிழுக்காகவே தன்னை ஒப்படைத்த பெருமைக்குரியவர் வா.மு.சேதுராமனைத் தவிர வேறு யாரும் இல்லை என முன்னாள் முதல்வர் கருணாநிதியால் பாராட்டப்பட்டவர். அவரது பிரிவால் வாடும் அவரது குடும்பத்தினர், உறவினர்கள், தமிழறிஞர்கள் உள்ளிட்ட அனைவருக்கும் ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்கிறேன்.






தமிழ்ப்பணிக்காகத் தன்னையும், தம் குடும்பத்தாரையும் முழுமையாக ஒப்படைத்து உழைத்தவர் பெருங்கவிக்கோ அவர்கள்!பெரு மீசையை வளர்த்தும் முறுக்கியும் அடலேறுவாக சிரித்தவர் பெருங்கவிக்கோ அவர்கள்!எளிமையானவர்! இயல்பானவர்! வெற்றி வீரர் பெருங்கவிக்கோ அவர்கள்!தமிழ்க் குடும்பத்தாரின் மூத்த தலைமகன் பெருங்கவிக்கோ அவர்கள் நம்மை விட்டுப் பிரிந்தார் என்பதே வேதனையை நல்குகின்றது ஐயா!கண்ணீரை உகுக்கிறேன்!தலை வணங்கி உருகுகின்றேன்!

குறள்மணம்- செ.வ.இராமாநுசன்- சென்னை - 600074




## தொல்லியல் வல்லுநர்,உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத் தலைவர் புகழ்வணக்கம்

எனது தமிழாசான் மு.தமிழ்க்குடிமகன் மூலம் பெருங்கவிக்கோவின் கவிதைகளின் அறிமுகம் 1976 ஆம் ஆண்டு கிடைத்தது. பின்னர் பேராசிரியர் தமிழ்க்குடிமகன் தமிழ்நாடு சட்டப்பேரவைத் தலைவராக இருந்த போது சென்னையில் சந்திக்கும் வாய்ப்பு கிடைத்தது .

சென்ற ஆண்டு தமிழ்நாடு திரும்பிய பிறகு தான் அவரை வெவ்வேறு நிகழ்வுகளில் நேரில் சந்திக்கும் வாய்ப்பு கிடைத்தது.

90 வயதில் ஒருவர் இவ்வளவு ஆர்வத்துடன் சுறுசுறுப்புடன் செயல்படுகிறாரே என்று வியப்படைந்திருக்கிறேன்.

அவரது மகன்கள் வா.மு.சே. திருவள்ளுவர், வா.மு.சே. கவியரசன், வா.மு.சே. ஆண்டவர், வா.மு.சே.தமிழ் மணிகண்டன், மகள் வா.மு.சே. பூங்கொடி என்று சிறந்த தமிழ்க்குடும்பத்தின் தலைவர்.

அன்னாரது குடும்பத்தினருக்கு எனது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**ஆர்.பாலகிருஷ்ணன்**



*பாவரசு வதிலை பிரதாபன்,
தலைவர்,
மராத்திய மாநிலத் தமிழ் எழுத்தாளர்
மன்றம்,மும்பை.

## புகழ்வணக்கம் செலுத்துகின்றேன்

கவிதையாய் புதினமாய் கட்டுரையாய் நாடகமாய்
நூற்றுக்கும் மேற்பட்ட நூல்களெனப் படைத்திட்டு
தமிழ்க்காத்து தரணியிலே தடம்பதித்த நல்லோராய்
போகாத நாடில்லை புழங்காத இடமில்லை
ஆகாத செயலில்லை அறியாத சொல்லில்லை
தொய்வின்றி ஆற்றுகிற 'தமிழ்ப்பணியில்' சோர்வில்லை
உலகத்து நாடெல்லாம் ஓய்வின்றிப் பலமுறையும்
ஓடோடித் தமிழுக்காய் உழைக்கின்ற நன்முத்தாய்
செம்மாந்த அறிவோடு சிந்தைமிகு உணர்வோடு
காலமெலாம் தனையீந்து தமிழுக்குத் தகைமையிட
கருத்தாழச் சிந்தனையும் கவிமாலைப் பொன்மலரும்
படைக்கின்ற கரத்திற்கு பார்போற்றும் வணக்கமதை
இனிக்கின்ற நினைவோடு இதயத்து மகிழ்வோடு
உளமாரச் சொல்வதுதான் உயர்வெனவே நினைக்கின்றேன்

# பெருங்கவிக்கோ வா.மு. சேதுராமன் மறைவுக்கு இரங்கல்.!






பன்னாட்டுத் தமிழுறவு மன்றத்தின் நிறுவனர் பெருங்கவிக்கோ வா.மு.சேதுராமன் உடல்நலக்குறைவினால் மறைந்தார் என்ற செய்தியறிந்து மிகுந்த துயரம் அடைந்தேன்.

சமூக நல்லிணக்கம் நிலைத்து நிற்க வேண்டும் என்பதற்கு அரும்பாடுபட்டவர். அவரது மறைவு ஈடு செய்ய முடியாதது. அவரைப் பிரிந்து வாடும் அவரது குடும்பத்தினருக்கும் உறவினர்களுக்கும் தமிழ் ஆர்வலர்களுக்கும் ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

பேராசிரியர் முனைவர்

**MH ஜவாஹிருல்லா MLA**



மனிதநேய மக்கள் கட்சி

வெளியிடும் இரங்கல் அறிக்கை

mmkhqofficial mmkinfo.in

July 05 2025



# பெருங்கவிக்கோ வா.மு.சே

## (இரங்கற்பா)

09.02.1935 — 04.07.2025



படுத்திருக்கும் வெண்புரவி மீசை
தொடுத்ததுவோ பைந்தமிழ்மேல் ஆசை
அடுத்திருக்கும் அவர்பணியைக் கேட்டால்
அடுக்கடுக்காய் இருக்குமொரு வீசை

வெடுக்கென்று தமிழ்மொழிமேல் தூசை
விடுத்தாலோ துடைத்தெறிவார் மாசை
கடுகடுத்து அவர்க்கெழுதும் விடையால்
நீடுயரும் இவர்வீட்டு மேசை

விடுப்பின்றித் தமிழ்ப்பணிகள் சிறக்கும்
மடுப்புனலாய் பலஎல்லை கடக்கும்
அடுப்புக்குள் தீநடப்ப தைப்போல்
படுக்கையிலும் இவர்கால்கள் நடக்கும்

தொடுவானப் பரப்பினிலே இருக்கும்
நெடுந்தமிழர் அவையெல்லாம் வணங்கும்
எடுப்பான பன்னாட்டு மன்ற
விடுதலையே! எம்வீர வணக்கம்!

● கவிஞர் தமிழ் இயலன்



## சென்னை அண்ணாநகர்த் தமிழ்ச்சங்கம் பெருமைப்படுத்தும் காட்சி

மூத்த தமிழறிஞர் எனச் சிறப்பளிக்கும் சி.பா.ஆதித்தனார் நினைவு விருது பெருங்கவிக்கோ பெற்றபோது சென்னை அண்ணாநகர்த்தமிழ்ச்சங்கம் பெருமப்படுத்திப் பாராட்டியது.சங்கத் தலைவர் புலவர்திலகம் இராமலிங்கனார்,செயலர் ஆட்சித்துறை வித்தகர் சுந்தரராசுலு, பெங்களூருத் தமிழ்ச்சங்க முன்னோடி முத்துச்செல்வனார்,உலகத் திருக்குறள் இணையக் கல்விக்கழக இயக்குநர் மறைமலை இலக்குவனார் மற்றும் பல தமிழறிஞர்கள் பெருங்கவிக்கோ அவர்களைப் பாராட்டிப் பேசினர்.

பெருங்கவிக்கோ வா.மு.சேதுராமன் மறைவு:
பொ.க.மா.[சிபிஎம்] இரங்கல்

சென்னை, சூலை 5 - பெருங்கவிக்கோ வா.மு. சேதுராமன் மறை வுக்கு மார்க்சிஸ்ட் கம்யூ னிஸ்ட் கட்சி இரங்கல் தெரி வித்துள்ளது. கட்சியின் மாநிலச் செய லாளர் பெ.சண்முகம் இது தொடர்பாக விடுத்துள்ள இரங்கல் அறிக்கையில் குறிப்பிட்டிருப்பதாவது: மூத்த தமிழறிஞர், பெருங்கவிக்கோ வா.மு. சேதுராமன் மறைவுக்கு மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் தமிழ்நாடு மாநில செயற்குழு சார்பில் தனது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக்கொள்கிறோம். கவிதைகள், காவியங் கள், கட்டுரைகள் என தன் வாழ்நாள் முழுவதும் எழுதிக் குவித்தவர். ஒரு லட்சத்திற்கும் மேற்பட்ட கவிதை களை பதிப்பித்தவர். பன் னாட்டு தமிழுறவு மன்றம் என்ற அமைப்பை நிறுவி உலகத் தமிழர்களின் உறவுப் பாலமாகத் திகழ்ந்தவர். தமிழ் மொழி வளர்ச்சிக்கா கவே தன்னுடைய வாழ்வை அர்ப்பணித்தவர் பெருங் கவிக்கோ வா.மு.சேதுராமன். அவரை பிரிந்து வாடும் அவரது குடும்பத்தினருக்கும், உறவினர்களுக் கும், தமிழறிஞர்களுக்கும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் சார்பில் ஆறுதலைத் தெரிவித்துக் கொள்கி றோம். இவ்வாறு அறிக்கையில் குறிப்பிடப்பட்டு உள்ளது.

# தமிழின் தலைவர்

பெருங்கவிக்கோ வா.மு.சேதுராமன் அவர்கள் புறநானூற்று வீரமெல்லாம் ஒருங்கு திரண்டு வந்ததைப்போன்ற எழுச்சியும் கிளர்ச்சியும் மிக்க உருவினர். ‘கெடல் எங்கே தமிழின் நலன்? அங்கெல்லாம் தலையிட்டுக் கிளர்ச்சி செய்க!' என்னும் பாவேந்தர் வாக்கே தம் வாழ்வுக் குறிக்கோள் எனக் கொண்டு அல்லும் பகலும் அருந்தமிழுக்குத் தொண்டாற்றியவர்..உலகின் எந்த மூலையில் தமிழர் இடருற்றாலும் ஓடோடிச் சென்று உறுதுணை புரிய உழைத்தவர்.உலக உருண்டையை ஐம்பது முறை வலம் வந்தவர்.நூறாயிரம் பாடல்களுக்கு மேல் தமிழ்க்கவிதை யாத்து நூற்றுக் கணக்கான
நூல்களை வெளியிட்டவர்.

ஆண்ட நாள் ஆண்ட பாண்டியன் போலவே
நீண்டு உயர்ந்த நெடிய தோற்றம்;
பூண்ட செருக்கிளர் பூலித்தேவனோ?
மீண்டு வந்த கட்டபொம்மனோ?
கரிகால் வளவனோ? செங்குட் டுவனோ?
ஆரியர்ச் சாய்த்த நெடுஞ்செழியனோ?
யாரிவன்? என்றே திகைக்கச் செய்யும்
சீரிய தோற்றம்; நேரிய சிந்தை;
கூரிய மதிநலன்; நினைவெலாம் தமிழ்நலன்;
குழந்தை போன்றே குமிழிடும் முறுவலன்;
அழகினில் முருகன்; பழகுதற் கினியன்;
நாடு சமயம் கட்சி என்னும்

வரம்புகள் தகர்த்தே அன்பரைப் பெற்றவன்;
ஆதி ராமனோ ஆரியர் திலகம்;
சேது ராமனோ செந்தமிழ்த் தலைவன்;
ஒவ்வொரு நொடியும் ஒண்டமிழ் நலனே
செவ்விதிற் காக்கச் செயற்பட்ட மறவன்;
அற்றைக் கீரர் பிற்றை இலக்குவர்
ஓருருக் கொண்ட அஞ்சா நெஞ்சினன்;
அன்னைத் தமிழ்நலன் போற்றிடும் பணியில்
ஆட்சி பயிற்சி அனைத்துத் துறையிலும்
மாட்சி பெற்று மாத்தமிழ் சிறந்திட
வாழ்நாள் எல்லாம் வருந்தி உழைத்தவன்;
உரிமை அடைந்திட உயர்தமிழ் சிறந்திட
பெருமிதம் பொங்கிடப் பெருநடைப் பயணம்
சிறப்புடன் நடத்திய சீர்மை மிக்கவன்;
ஒண்டமிழ்க் கவிநலன் உலகோர் போற்றிட
உலகெலாம் வலம்வந்த ஒப்பிலாச் சிறப்பினன்;
மறைந்தான் என்கோ பிரிந்தான் என்கோ!
யாண்டுச் சென்று எங்ஙனம் காண்போம்?
மூண்ட துன்பத் தீயினில் நைவதோ?
தமிழ்நலன் காத்திட யாரே இனியுளர்?
இமிழ்கடல் உலகில் இருள் சூழ்ந்ததுவே!
காலமும் அண்ணலைக் கவர்ந்து சென்றதே!
ஞாலம் போற்றிய ஞாயிறு மறைந்ததே!

--..---------மறைமலை இலக்குவனார்,

குறள்நெறி இணைய இதழ்க்குழுவினர்
kuralneri45@gmail.com

# குவலயமெங்கும் குறள்நெறி பரப்பும் நான்கு இணைய இதழ்கள்













## ஆண்டுக் கட்டணம் வேண்டாம்!

## நன்கொடை வேண்டாம்!

படியுங்கள்!பகிர்ந்திடுங்கள்!

anjal@kuralvirtual.com என்னும் மின்னஞ்சலுக்கு உங்கள் மின்னஞ்சல் முகவரி அல்லது புலன எண் தெரிவித்தால் போதும்!